ஏற்றுக்கொண்டு, அந்தப் பயிற்சியை அவைகளுக்கு அளித்து, அவைகளை ஜில்லா தலைமையிடங்களில் வைத்திருக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : குற்றங்களைக் கண்டு பிடிப்பதற்காக நாய்கள் இருக்கின்றன. ஆகையால், தனிப்பட்டவர்களிடம் இதை விட முடியாது.

**Sri M. C. MUTHUKUMARASWAMY** : பகுத்தறிவில்லாத நாய்களைக் கொண்டு பகுத்தறிவுள்ள மனிதர்கள் செய்யும் திருட்டுகளைக் கண்டுபிடிக்க அவைகளுக்குப் பயிற்சி கொடுப்பதற்குப் பதிலாக, பகுத்தறிவுள்ள மனிதர்களுக்கே நல்ல முறையில் பயிற்சி அளித்து, அவர்களைக் கொண்டே திருட்டுக்களைக் கண்டுபிடிப்பதற்கான நடவடிக்கையை அரசாங்கம் எடுக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : நாய்களுக்குப் பகுத்தறிவு இல்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது.

*Fee concessions*

* 615 *Q.*—Sri S. LAZAR (on behalf of Sri T. T. Daniel) : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Christian converts of Scheduled Tribes and Backward Communities are entitled to fee concession?

The Hon. Sri C. SUBRAMANIAM : A pupil belonging to any of the Scheduled Tribes or to any of the communities included in the list of most backward classes will be granted fee concession irrespective of his religion while a pupil belonging to any of the other backward classes who is in receipt of a fee concession shall not be deprived of it, if he becomes a convert to any other religion while holding the concession.

**Sri A. V. P. ASAITHAMBI** : இம்மாதிரி புத்த மதத்திற்கு மாறியவர்களுக்கும் தற்போது சம்பளச் சலுகை வழங்கப்படுகிறதா ? அல்லது வழங்க ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நம் ராஜ்யத்திலே யாரும் புத்த மதத்தைத் தழுவியதாகத் தெரியவில்லை.

**Sri S. LAZAR** : மதத்திற்கு அப்பாற்பட்ட ஒரு அரசியலமைப்பைக் கொண்டிருக்கும் நாம், மதத்தின் அடிப்படையிலே இந்த வித்தியாசத்தைக் காண்பிப்பதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : மதத்தின் அடிப்படையில் இருக்கும் வித்தியாசத்தை நீக்குவதற்குத்தான் முயற்சி செய்திருக்கிறோம்.

*Minor Irrigation Schemes*

* 616 *Q.*—Sri N. R. THIAGARAJAN (on behalf of Sri P. S. K. Lakshmipathi Raj) : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government intend to execute the following schemes prepared under the Special Minor Irrigation Programme :—

(1) Varadhamanadhi Anicut Scheme in Ayakudi Zamin area, Palni taluk; and

(2) Kudiraiyar Anicut Scheme near Pappanpatti?

29th September 1958]

THE HON. SRI P. KAKKAN : No scheme has yet been prepared or sanctioned for the provision of anicuts across these rivers. The question of their execution therefore does not arise.

SRI N. R. THIAGARAJAN : குதிரையாறு அணைக்கட்டுத் திட்டமும் வரதமா நதி அணைக்கட்டுத் திட்டமும் லாபகரமான அணைக்கட்டுத் திட்டங்களாக இருக்கும் என்று கேள்விப்படுகிறோம். அப்படிப்பட்ட இந்தத் திட்டங்களை அரசாங்கத்தார் பரிசீலனை செய்தார்களா, இல்லையா ? பரிசீலனை செய்திருந்தால், அவை லாபகரமான திட்டங்கள் என்று தெரியவருகிறதா, இல்லையா ?

THE HON. SRI P. KAKKAN : அத்திட்டங்களை அரசாங்கத்தார் ஏற்கெனவே பரிசீலித்திருக்கிறார்கள். இருந்தாலும், உணவு-விவசாய இலாகாவின் மூலம் அவைகளை மீண்டும் பரிசீலிப்பதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்.

*Tractors*

* 617 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state— 9–40 a.m.

(*a*) the number of tractors (including bull-dozers) allotted to and made available at Tiruchirappalli district;

(*b*) the number of them in working condition;

(*c*) the steps taken to make the others function;

(*d*) the acreage of cultivable waste land scheduled to be reclaimed during the Second Plan period; and

(*e*) the actual acreage reclaimed and cultivated?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 12.

(*b*) 7.

(*c*) Necessary spares have been ordered for the sick units and on receipt of the same the units will be commissioned. The units which are under overhauling will also be commissioned after completing the work speedily.

(*d*) An area of 1,500 acres of virgin lands and 1,000 acres of current fallows is programmed to be reclaimed each year during the Second Plan period.

(*e*) 517 acres of virgin lands and 2,471 acres of current fallows.

SRI S. LAZAR : வருடந்தோறும் 1,500 ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவருவது என்று திட்டமிடப்பட்டிருந்தபடி, அத்தனை ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வராததற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆயிரத்தி ஐந்நூறு ஏக்கரை சாகுபடிக்குக் கொண்டு வருவது சாத்தியப்படவில்லை. எத்தனை ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவர சாத்தியப்பட்டதோ அத்தனை ஏக்கர் நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : There is still so much demand for tractors both in the private sector and the Government. Is it a fact that the import of these tractors has been completely stopped?